# ஆடை மூடாத அழகு

---

அரிவையர்க்கு-ஆண்டவன் அருளிய வரமோ அழகு,
அழகும், கவர்ச்சியும் மனதின் இரசனை
ஆடையின் இரசனை அரிவையர் உரிமை-அபாயாவும்,
ஆடை இலக்கணமும் ஆணினத்தின் சிறுமை?

இயற்கை எதையும் மூடி மறைப்பதில்லை
மனம் படைத்த மனிதனுக்கு
ஆடை மூடியும் காமம் தீரவில்லை-நாளும்
அணிந்திட முகமூடிகளும் போதவில்லை

ஆணினம் பூட்டிய அடிமைத்தன விலங்கே-“அபாயா”-
நாளும் தொழும் நெஞ்சங்களில் காமம் போகாத கறையோ?
அல்லாவும் நீக்காத குறையோ?

தாசிகளாய், அந்தபுர ஆசை நாயகிகளாய்
ஆணினம் நூற்றாண்டுகளாய் அடக்கியாண்ட பெண்மை
ஆளுமையோடு போராடும் பெண்ணியத்தின் புதுமை .?

முடி முதல் அடி வரை மறைத்தும்
ஆண் மனங்களில் மறையாத காமம்
அக நிர்வாணத்தை மறைக்க
மத முகமூடியும் போதாத பாவம்

விழிப்புற்ற மனத்திலோ விகல்பம் தோன்றாத மாயம்
மூடி மறைத்த அழகுகளால் முடக்கி வைத்த காமம் கொதிக்க
விழிப்புணர்வில்லாத இருட்டு மனங்களுக்கு அழகும்- காமக் கிளர்ச்சி
அபாயாவும் கலாச்சாரம், விபச்சாரமும் வியாபாரம்?

அன்பே சிவம் என்றறிந்து மனமே தாய்க் குலத்தை வணங்கு
அழகை இரசித்து ஆனந்தம் காண பெண்மையைப் போற்று
விழிப்பாயிரு, தூய மனமே இறையில்லம்
தாய்மையோ தெய்வீகம்-தாயின் காலடியில் சொர்க்கம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-13-06-2023

# அன்புப் படையல்

---

கண்டு வியந்தேன்-மனம் களி கொண்டு நடனமாட
நட்பைச் சுவைத்தேன்-அன்பை நினைத்தேன்
ஆண்டுகள் பல போனபின்பும்
அழியாத கோலமான நட்பை போற்றிப் புகழ்ந்தேன்

அருகருகே அமர்ந்து கற்றதுவும்-ஆற்றோரம்  கதை பேசிக் களித்ததுவும்
பாடம், படிப்பு, ஆட்டம் பாட்டம் என் விளையாடி வாழ்ந்ததுவும் நெஞ்சில் இனிக்க
இனியொரு காலம் இதுபோல் இல்லை என மனம் தவிக்க-நட்பின் வசந்தம்
பள்ளிப் பருவத்தின் மாறாத சுகந்தம் இன்றும் நெஞ்சை நிறைக்கும் இன்பம்.

உங்கள் வாழ்த்து மடல் என்னை இன்பக்கடலில் மூழ்கடித்திட
தம்பதியாய் வாழ்த்திய உறவில் நெஞ்சம் நெகிழ்ந்திட-
நீர் பூத்த விழிகளில் நட்பைச் சுவைத்த ஆனந்த நிலைகள்
நெஞ்சில் முக்கனிச் சுவையானதே-நண்பனே
நன்றியால் இதயம் பொங்குதே




இறையருளால் இல்லறம் தழைக்க, இன்பம் பெருக
பல்லாண்டு பல்லாண்டு வளமுடன் வாழ்க
என்றே மனதார வாழ்த்துகிறேன்
நட்பின் பெருமையைக் கற்பாய் போற்றுகிறேன்

உங்கள் நண்பன் *Pax*

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-14-06-2023

# ஆராதனை

---

அழகு மங்கை இவளைக் கண்டு நிலவும் கிறங்கும்-
வெண்முகிலில் தன் முகம் மறைத்தே மயங்கும்
விழிப்பூக்களின் அழகில் குவளையும் வியந்தே சிரிக்கும்
கன்னச் சிவப்பில் கனிகளும் பூரித்துச் சிவக்கும்

புன்னகைப் பூக்களில் பொன்னகையும், முத்துக்களும் ஒளிரும்
பூங்குழல் கண்டு கருவானும் வியந்து சிலிர்க்கும்
கயல்களும் விழிகண்டு மயங்கும், இமைப் பூக்களின் அழகில்-
பட்டாம் பூச்சிகளும் இறக்கை விரித்துப் பறக்கும்

பூவாடை வீசும் பொன் மேனி கண்டு-காதல் வாடையில்
என் சுவாசமோ தள்ளாட, தழுவிடும் தென்றலும் வாசம் பூசி
நேசம் கொள் எனச் சொல்லும் வாச முல்லைக்கொடி
என் நெஞ்சில் படரத் துடிக்கும் இதயக் கொடி



இடையில் மின்னல் அடிக்க, நடையில் நாட்டியம் படிக்க
மொழியில் கவிதை இசைக்க, காதலலே கன்னி உருவெடுக்க
கணை பட்ட மானாய் காமன் கணைபட்டு துடிக்கும் மனசு
காதல் சொல்லத் துடித்திடும் இளவயசு

இமைகளால் காதலை இதயத்தில் பூசி- -மின்னல்
இடையழகால் இதயத் துடிப்பை கூட்டி
குமுத வாயில் அமுதைச் சுவைக்க
கயல்களால் தூதுவிட்ட காதல் மது.

கத்தும் கடல் ஏழும் நெஞ்சில் பொங்க
காதல் சுனாமியில் இதயம் மூழ்கித் தவிக்க
காதல் போதையில் நெஞ்சம்  தடுமாறக்
கண் பருகிய காதல் மதுவாய் காதல் மாது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-14-06-2023

# ஆசைகள்

---




ஆணுறைக்குள் அகப்படாத விந்துக்களும்
கர்ப்பத்தடை மாத்திரைகளைக் கடந்து
கருவுற்ற முட்டைகளும்
அழகுச் சிலைகளாய் வடிவெடுத்து
அநாதைகளாய் உருவழிந்து தெருவிற்கு வர
ஒரு வேளை உணவில்லாத ஏழைகளுக்கும்
உண்டி பெருத்த செல்வருக்கும்-எவ்வேளையிலும்
எடுக்கும் மாறாத காமப்பசி



உடல் கொண்டு உடல் தின்று, உடல் கொள்ள
ஒருடல் எடுக்கும் உடலுறவுகளால் நாளும்
உருவாகும் பல நாறு அநாதைகள்
உடற்பசி போக்க உணவின்றி வாடும் உலகில்-
ஆணுறையும், கர்ப்பத்தடை மாத்திரைக்கும்
வழியில்லாத ஏழைகள்




உணவுக்கும், உடைக்கும். உறங்கிட ஓர் வீட்டிற்கும்
பஞ்சமான ஏழைகள் வாழ்வில்-உடுக்கிற
உனக்கு உயிர் இல்லை-இரசிக்கிற எனக்கோ உடை இல்லை
பார்த்து ஏங்கும் அநாதைச் சிறுவன்

அடுத்த வேளை உணவிற்கு அம்மாவும் இன்றி
ஆனந்த புன்முறுவல் பூக்கும் ஏழ்மைத் தளிர்கள்
காம காளைகளின் நாளைய மேய்ச்சலுக்கு
தீனியாகும் இளந்தளிர்கள்?

விழிகளில் துமிப்பதா பொழிவதா எனத் தயங்கும்
கண்ணீர் மழை-நெஞ்சுக்குள் விழிப்பதா?
உறங்குவதா என பொருமிக் களைக்கும் சோக எரிமலை

பல்கிப் பெருகி பூமியை நிரப்பிட படைத்தவன் கட்டளை
உதரம் பெருத்த வயிற்றைத் தாங்கும்-ஏழைக்கு
ஒரு வேளை உணவுக்கு-பாலியலே வாழ்வாதாரம்-பிறக்கும்
குழந்தைக்கு தெருவே நாளை வளர்ந்திட ஆதாரம்?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-14-06-2023*

# அழகு

---

மையெழுதிய விழிகள் என்னை மயக்க-
நெய்யாய் இதயம் நெகிழ்ந்தே உருக-இதமாய்
தழுவிச் செல்லும் தென்றல் இன்பத்தைக் கூட்ட
அந்திப் பொழுதில் வாவிக்கரையில் கண்ட
அழகோ பேரின்பம்

மோகினியோ?, தேவதையோ மனம் வியக்க
துள்ளும் கயல்கள் அழகென்றாள்-காதல் மொழியும்
கயல்விழிகள் அழகென்றேன்
உலாவரும் கார்மேகம் அழகென்றாள்
காற்றாடும் மலர்க்கூந்தல் அழகென்றேன்

மின்னும் நட்சத்திரங்கள் அழகென்றாள்-புன்னகையில்
மின்னும் முத்துப்பற்கள் அழகென்றேன்-
ஆடும் முல்லைக் கொடி அழகென்றாள்
அசையும் கொடியிடை அழகென்றேன்-

பூ இதழ் அழகென்றாள்-பூவையின் செவ்விதழ் அழகென்றேன்
வான்நிலா அழகென்றாள்-பெண் நிலா அழகென்றேன்-
பூத்தாள் பௌர்ணமியாய் மலர்ந்தே-என்
காதல் வானில் உலாவந்த தேன் நிலா

நாணிச் சிவந்த மேனியில் மோகனத்தின் ஆனந்த நர்த்தனம்
சூடி மகிழ்ந்த கார் குழலில் மல்லிகையின் நறுமணம்
காதலான என் மனதோ கவிதைப் பூக்களின் நந்தவனம்
கண் பார்த்து நெஞ்செழுதிய காவியமோ பிருந்தாவனம்

காதல் பூமாலை சூடிக்கொடுத்த கோதை
காதலுக்கு இவளோ-
கண்ணண் சொல்லாத இன்பக் கீதை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-16-06-2023*

# வற்றாத செல்வம்

---

அகல வாய் திறந்து, அள்ள அள்ளக் குறையாத செல்வமாய்
அள்ளிப் பருகிட சீதள நீர் தரும் ஜலதாரிணியாய்,
சொறிக்கல் சேலை கட்டிய ஊருணியாய் எங்கள் கிணறு.

அண்டை அயலார் நாளும் ஆசையாய் வந்து நீராட-
இசையோடு உருளும் கப்பி ஆயிரம் கதைபேச,
ஓடும் நீரில், உயிர் செழித்து வளரும் வாழை, கமுகு

முன் வீட்டு பேரழகி மும்தாஜும் முறுவல் சிந்திக் குளிக்க
கப்பியின் இசையோடு காதல் கீதமிசைத்து
முதுகு தேய்க்கும் கணவன் முகம்மது

அண்டை வீட்டார் ஆழமாய்த் தோண்டி புதுக்கிணறு அமைத்திட
வற்றாத பொய்கை ஓர் கடுங்கோடையில் வற்றி மெலிந்திட
வாடிய சொந்தங்கள்.-தூர் வாரித் துப்புரவு செய்திட
அடிவயிற்றில் உமியிட்டு மூடிய ஓர் புதுக்கிணறு-என்னே ஆச்சரியம்.

அள்ளிக் கொட்டிய உமியில்-புதையலாய் அழகின் இரகசியம் தெரிய-
ஆழத் தோண்டிய பெருங்கிணற்றின் ஊற்றுகண் பொங்கி ஓட
சொல்லமுடியாத எம் பேரானந்தம்

கோடை வெயிலுக்குச் சீதளமாய், குளிரும் மாரிக்கு இளஞ் சூடாய்
அள்ளி ஆசை தீரக் குளித்தும் என்றுமே சலிக்காத பேரின்ப நீரூற்று,
சுற்றி நின்று, சகோதரர் நாம் சுந்தரமாய் அள்ளிக் குளிக்க-
மாரியில் உயர்ந்து வளர்ந்து கை குலுக்கிடும் சீமாட்டி
கோடையிலே சமைந்து குனிந்த புது மணச்செல்வி

நிலவும் முகம் பார்க்க நாணிச் சிரிப்பவள்
கதிரும் தொட்டணைக்க-காதலாகி கொதிப்பவள்
ஆசையாய் அமர்ந்து நான் படிக்க -தாய் மடியாய்
தாழ்ந்து பணிந்த அவள் கைச்சுவர்

தம்பி காணாமற்போயிட, சொல்லியழ முடியாத சோகத்தை-
யாருமறியாது அள்ளி மூழ்கி அழுதிட ஆதரவாய் எனை அணத்திட்ட தாய்
நீர் இறைக்கும் இயந்திரம் வந்திட, நீண்ட தொப்பிள் கொடி உறவும் அறுந்திட
கப்பியும் ஊமையாகி இசை மறந்திட, ஒரு புறம் ஒதுங்கிய கிணறு
வசதிகள் வந்திட, இயற்கைக்கும் மனிதனுக்கும் இடைவெளி பெருகிட
எங்கே நிம்மதி ? தூய மனமே இறை சன்னிதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-16-06-2023*

# அஞ்சலி

---

கயல்விழிகள் செப்பும் மொழியை மனம் காதல் என்று மொழி பெயர்க்க,
மயங்கிய மனம் தையலாள் காதல் வலையில் சிக்கித் தவிக்க
செவ்விதழ் பூத்த புன்னகையை இதயம் செந்தேன் மலராய்ச் சூடத் துடிக்க
காமன் கணை பட்ட மனம் யாத்த காதல் ஹோமம்

பூ மேனி வாசம்-தூபாஞ்சலி, சுட்டும் சுடர் விழியிரண்டும் தீபாஞ்சலி
பூவையோ காதலுக்கு மலரஞ்சலி-அமுத மொழியோ
என்னைக் காதலில் வீழ்த்திய கீதாஞ்சலி

குமுத வாயில் அமுது சுவைக்க மனம் தவிக்க
முத்துப் புன்னகையில் மனம் தவிக்க, பூங்கோதையோ
ஶ்ரீராமன் நான் தேடிய சீதை

பொட்டு வைத்த வட்ட நிலா-பூங்குழலில் மலர்களின் திருவிழா-
பொன்மேனியில் மல்லிகை, முல்லையின் பூமணம்
கன்னியைக் கண்ட இதயத்திலோ மாறாத காதலின் நறுமணம்
வேடன் வலைபட்ட மானாய்-காமன் கணைபட்ட என் மனம்

முக்கனியும், சர்க்கரையும் சேர்ந்த கலவை
முத்தமிழின் அவை, திகட்டாத  காமத்துப்பாலின் சுவை
பாவலர்களுக்கோ-பூவை அழகின் உவமை

கீதாஞ்சலி கண்டு-காதல் மனம் கவிதாஞ்சலி படைக்க
மலரஞ்சலியாய் மாலை மாற்றி பூவையை நான் மணக்க
இதயத்தில் காதல் வாசம் -சூடிகொடுத்த
ஆண்டாள் மனதிலே காதலின் மாறாத நேசம்

முத்தச் சுவை நித்தம் சுவை, காதல் பக்திச் சுவை
எத்தித்திக்கும் -தித்திக்கும் கன்னி, திகட்டாத காதல் சுவை
காதல் அவை இவளோ அழகின் ஔவை
காமன் கணை இவளோ-கம்பனின் கவிதைச்சுவை

கண்கள் பார்த்துச் சுவைக்க, மனம் நினைத்து இரசிக்க
இதழ்கள் சுவைத்து களிக்க-பெண்பாலோ இன்பத்துப்பால்
கனவிலும் இனித்தாள், நினைவிலும் இனித்தாள்
மனதிலும் இனித்தாள்-மஞ்சத்திலும் இனித்தாள்
அமுதிலும் இனியவள்-அழகிலோ திருமகள் என்னவள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-16-06-2023*

# அன்னையும், அன்புத் துணைவியும்

---

மையெழுதிய விழிகளில் நெஞ்சம் மயங்கிட, வண்ணக் கனவுகள் மலர்ந்திட
கவிதைகள் வடித்து கவிஞனாய் மாறிக் காதல் வளர்த்திட
உன் வானம் நான், என் தேன் நிலவு நீ எனப் பூத்த நம் காதல்

காதலாகி என் நெஞ்சில் குடிவந்த காதல் தேவதை
என்னைத் தாலாட்டும் பூமழை
தாய்க்குப்பின் தாரமான அன்பின் அவதாரம்

காதலின் வண்ணங்கள் நான் காண-கன்னியோ காதலின் பூவனம்
தாயின் அரவணைப்பை நான் தேட-தாயே தாரமான அவதாரம்
ஈர விழிகளை இதழ்களால் துடைத்து-குழந்தையாய்
தேற்றிடும் தாய்மை-மனச்சுமைகளை இறக்கி வைக்க
சுமைதாங்கியாய் மாறிய பெண்மை

இல்லத்தில் என்றும் ஆனந்தம் நிலவ
நாளும் ஒலிக்கும் சுப்பரபாதம்
ஆலயமாய் அன்னை இல்லம் மாறிட
அயராது பாடுபடும் அன்பின் அவதாரம்

தூங்குகையில் உன் தாலாட்டு, துக்கத்தில் மடி தந்து
அன்னையாய் உன் சீராட்டு, நோயுற்று கண்ணயரத்-தாயாய்
கண்மலர்ந்து காத்தாய், உணவையும் அமுதாய் மாற்றி
தேவனாய் என்னை மகிழ்வித்தாய்

தாய்மையில் மலர்ந்து, பிள்ளைச் செல்வம் தந்து
தந்தையாய் என்னை உயர்த்தினாய், இளமையும் அழகும் கழிந்து
மூப்பும் பிணியும் மலர்ந்திட, விழுதாய் என்னைத் தாங்கி
தொழுதே என்னைப் போற்றி தாயே நீ மகிழ்ந்தாய்

அன்பின் அழியாத கோலமாய் என் தாரம்
அன்னையும், துணைவியும் ஆணின் வெற்றிக்கு ஆதாரம்
தாயும், தாரமும் இறை அன்பின் அவதாரம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-16-06-2023*

# அவுஸ்திரேலியா காட்டுத் தீ

---

அணையாத காட்டுத் தீயை அணைக்கச் சென்ற தந்தையோ
அன்பு மனைவியின் வயிற்றில், அவியாத் தீ மூள
அணைந்த தீபமானான்-தந்தையின் வீரப்பதக்கத்தை
ஏந்திய சிறுவனோ பார்த்தவர் விழிகளில்-கண்ணீர்
பூத்திட, அவலப் பாத்திரமானான்.

வீரப்பதக்கத்தை புதிராகப் பார்த்த தனயனக்கு
தந்தைக்கு நேர்ந்த கதி தெரியவில்லை
தாய் நெஞ்சைத் தீய்க்கும் சோகத் தீயும்
சுடும் கண்ணீரும் புரியவில்லை

வீரப்பதக்கம் வழங்கிட்ட நிகழ்வில் பார்த்வர் விழிகளில்
பூத்த கண்ணீர், காட்டுத் தீயையும் அணைக்கவில்லை
விதவையின் சோகத் தீயையும் தணிக்கவில்லை

அறியாப் பருவத்தில்-புரியாத சோகம் ஒரு நாள் தெரிய-
தாயோ வண்ணம் கலைந்த ஓவியமானாள்
மகனோ தந்தை இல்லாப் பிள்ளையானான்

தூக்கி வளர்த்து வீரத்தை ஊட்டி வளர்த்த வேங்கை
நித்தம் நெருப்போடு போராடிய கங்கை
காட்டுத் தீயில் ஆகுதியாகி-நெஞ்சில் தீபமானான்,
இல்லத்தில் மாலையிட்ட படமானான்.

காட்டுத் தீயும் ஒரு நாள் அணையும்
நரகத்தீயும் முடிவில் அணையும்
அன்னை, பிள்ளை நெஞ்சில் எரிக்கும்
சோகத் தீயை அணைப்பார் யாரோ?

நரகத் தீயிலும் கொடிய காட்டுத் தீ அவுஸ்திரேலியாவை சுட்டெரிக்க
தீயணைக்கும் இயந்திரத்தின் சைரன் சத்தம்-பாடும் பறவையின்
குரலில் எதிரொலிக்க -பண்டா குட்டியின் விழிகளில்
மறையாத காட்டுத் தீயின் தீராத அச்சம்
கருகிச்சாம்பலான விலங்குகளோ இலட்சோபலட்சம்.

கரும் புகை சுவாசத்தை திணறடிக்க -இழப்புகள்
சொந்தங்களை சோகக் கடலில் மூழ்கடிக்க-
கருணை மழையே-ஏனிந்தக் காட்டுத் தீ இறைவா?

அஞ்சுகம் எனக் கொஞ்சி மகிழ்ந்த பந்தம்
மார்பிலும். தோளிலும் அருஞ்சுகம் தந்த சொந்தம்
அவியாத் தீ அணைக்க போராடி அணைந்த தீபம்
அன்னை, பிள்ளையின் வாழ்வில் அணையாத தீபம்

காட்டுத் தீயும் ஒரு நாள் அணையலாம்
கலங்க வைக்கும் நரகத்தீயும் அணையலாம்
அன்னை, பிள்ளை நெஞ்சை எரிக்கும்
சோகத் தீ அணையும் காலம் யாரறிவார்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16-06-2023

# அவள் தந்த காதல்

---

என் வாழ்வில் நீ வந்தபோது, எந்நாளும்
வசந்தம் என்றாகிட-காதல் கோகிலம்-
நெஞ்சுக்குள் கூவி மகிழ்ந்திட
நாளும் புலரும் வண்ணப் பொழுது

வண்ணப் பூக்களை இரசிக்க, வாழ்த்தி சிரித்துப்பேச,
ஓடும் நதியில் கால் நனையக், கருவான் நிலவை கண்டு களிக்க
குயிலின் கானத்தை-தழுவும் தென்றலை ருசிக்க கற்றுக் கொண்டேன்
புல்லை மிதிக்காமல் நடக்க, பூவைப் பறிக்காமல் இரசிக்க
ஆற்றோரம் அமர்ந்து "சும்மாயிருக்கப்" பழகிக்கொண்டேன்.

வாழ்வைக் களிப்போடு வாழ, மனதை விழிப்போடு நோக்க
புதுப்பார்வை தந்தவள்-நாளும் அன்பினால் என்னை
இன்புற வைத்திட, தாயாய், தோழியாய், காதலியாய்
அன்பின் அவதாரங்கள் எடுத்த தேவி

நடையும், உடையும், முடி வாரும் முறையும் மாறிட-
குழந்தையாய் நானும் மீண்டும் பிறந்திட
தாயாய் என்னை கொஞ்சித் தாலாட்டும் காதல் மனது.
அலைகடலாய் இரைந்த வாழ்வு ஆழ்கடலாய் அமைதி காண
-என் வாழ்வில் காதலின் புது வரவு.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16-06-2023

# சித்திரப் பாவை

---

விற்புருவங்களில் காதலின் பிரம்மாஸ்திரங்கள்
செவ்விதழ் பூத்த புன்னகையிலோ, காதல்கனி
என்னைச் சுவைத்துக் “கொல்” என்னும் வேண்டுதல்கள்
கடைக்கண் வீச்சிலோ கயல்களின் காதல் தூண்டில்கள்

நுதலமர்ந்த திலகத்தில் கலையின் நுனுக்கங்கள்
அழகில் இதழ் விரிக்கும் வண்ணப்பூவின் அழகு வடிவங்கள்
விரியும் கார்குழலில் விடியல் சொல்லும் பூவனங்கள்
விரிந்த கார்குழலில் கலாபமயிலின் தோகை வண்ணங்கள்.

ஓவியக்கலையின் விசித்திரமாய் சித்திரப் பாவை
காவியத் தலைவியோ கவிஞன் நெஞ்சுக்குள்-
காதல் மழை பொழியும் பூவை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16-06-2023

# நல்லரெத்தினம்

---






ஆண்டுகள் நாற்பத்தி ஐந்தைக் கடந்தும்
காலாவதியாகாத உறவாய் நம் நட்பு
காலங்கள் கடந்திட- வாழும் தேசங்கள் மாறிட
நட்பு வாழும் இதயம் மட்டும் இன்றும் மாறவில்லை-
பருவங்கள் பொய்த்தாலும்
அன்பு மழை பொழிந்திட தவறுவதில்லை

ஆறாத சோகத்திற்கு அருமருந்தாய்-
தீராத தனிமைக்கு உற்ற துணையாய்-
என் எழுத்துக்கு மாறாத பக்கபலமாய்
ஐயனே உன் அன்பு அன்றும், இன்றும்.

இறை தந்த உறவே நம் நட்பூ-மாலைக்குள் வாடும் பூ அல்ல
பூசைக்கான மலர் இது-நான் செய்தாத தவத்திற்கு
இறை தந்த அருள் என்பேன்
எல்லாம் அவன் செயல் என்பேன்

நாளும் நலம் வாழ இனியும் பல்லாண்டு சுகம் காண
வாழ்க வாழ்க என்று வாழ்த்துகின்றேன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16.06.2023

Pax-27.1.2020

# நலம் வாழ எந்நாளும் வாழ்த்துக்கள்

---



துடித்து களைத்த இதயங்கள்-களைப்பாறி -மீண்டும்
இளமைத் துடிப்போடு துடிக்க, தவித்து துடித்த
சொந்தங்கள் மகிழ்ந்து சிரிக்க கடவுளான
இதய மருத்துவர்.

காதலாகி துடித்த மனோவின் இதயம்
களிப்போடு துடிக்க காதல் சொன்ன காதலர்
நாடியும், நாளமுமாகி காதல் இதயத்தில்
இணைந்து களிக்க இல்லறம் ஏற்ற நல்லவர்

அன்று உயிரா? பொறியியலா? விவாதத்தில் தோற்ற
உயிரியல் மாணவர் குழாம்-இன்று மகிழ்ந்து
வெற்றிக் களிப்போடு துள்ளித் துடிக்க-
இன்றும் உயிரியல் குழாம் தலைவராய்
உயர்ந்து நிற்கும் இதய வைத்தியர்

இன்றும் வெற்றி சொல்ல் அரும் பணியாற்றும் மருத்துவர்களாய்
மனோ, கலா, நவநீதன், சுந்தரி, அன்னதாஸ் நண்பர்கள்
எண்ணிப் பார்த்திட இறுமாப்புறும் இதயம்
எல்லாப் புகழும் உனக்கே இறைவா
என்றே போற்றி மகிழும்

வானுயர்ந்தும் தாழ நின்ற நண்பனை மறவாத நட்பு
ஊர் வரும்போதெல்லாம் உறவாடிக் களிக்கும் உறவு
பல்லாண்டு கடந்தும் பழம் மதுவான நட்பு
காலம் செல்ல கனிந்த பழமாய் இனிக்கும் உறவு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16.06.2023

# ஏன் மறந்தாய்?

---

ஒரு வார்த்தை சொல்லாமல் கண் மறைந்தாய்
ஒரு மடலும் எழுதாமல் உன்னை மறைத்தாய்
உன் தொலைபேசி மணிக்காய் மணிக்கணக்கில் என் தவங்கள்-
உன் ஈ மெயிலின் வரவிற்காய் என் செபங்கள்





நாட்கள் கழிந்தன, பருவங்கள் வந்து போயின
வாட்டும் நினைவிலும், என்னை வருத்தும் கனவிலும்
உன் காதல் தீயடி கண்ணம்மா

அலைமோதும் கடல்போல் உள்ளம் அல்லாட
நூலறுந்த காற்றாடியாய் மனம் தள்ளாட
காற்றினில் வந்த சேதியில் கடல் கடந்த நாட்டில்
மணப்பெண்ணாய், மங்கல நாயகியாய் நீ

வாழ்த்துவதா வருந்துவதா? வாழ்கை இவ்வளவுதானா?
காதல் இதுதானா? அழ மறுத்த விழிகள் அந்தி வானை வெறித்திட
சோடியாய் வீடு திரும்பும் பறவைகள் சோகத்தை கூட்டிட
காற்றினில் வரும் ஒற்றைக் குயிலின் கானம்
மெல்லச் சிரித்திட, வாழ்வோ பூவனம்



எங்கிருந்தாலும் வாழ்க இதயம் வாழ்த்திட
என்னை விட நல்லவனை இறைவன்-துணையாய்
தந்தான் உனக்கு என்றே இறைவனைப் போற்றிட-
மனைவி அமைவதல்லலாம் இறைவன் கொடுத்த வரம்
வானொலியில் ஒலிக்கும் பாடல்

எல்லாம் அவன் செயல் என்றே தொடரும் என் பயணம்
உறவுகள் சிறுகதை- பலவேளைகளில் குறுங்கவிதைதான
எண்ணிட வாழ்விலோ ஆனந்த அமைதி

சொல்ல மறந்த காதல் என்னை மறந்திட
சொல்லியழுத காதல் என்னை விட்டுப் பிரிந்திட
சோகம் என் சொந்தமானது-சொர்க்கம் உன் சொந்தமானது
இருமை கடந்தால் வாழ்வோ இன்பமானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16.06.2023

# இட்லிப்பும் ஏழை அபாயாவும்.

---

விண்ணும், மண்ணும் அதிர்ந்திடத் தொடர்ந்திடும் யுத்தங்கள்
காடும், கடலும் வாடிட ஒலிக்கும் உறவுகளின் ஒப்பாரிச் சத்தங்கள்
சத்தமின்றிப் பாயும் இரத்த நதிகள், இடி மின்னலின்றிப் பொழியும்-
அநாதை, விதவைகளின் கண்ணீர் மழைகள்

இடிபாடாய்ச் சுடுகாடாய் மாறிடும் இட்லிப்
இல்லிடம் இழந்து, இருப்பிடம் விட்டு
புகலிடம் தேடிடும் சிறகொடிந்த பறவைகளாய்
அப்பாவித் தாய்க் குலம்




அறம், பொருள், இன்பம் கண்டு தேனாய் இனித்த வாழ்வு
ஒரு பொழுதில் கலைந்த கனவாக, அறம் பழித்துப், பொருள் அழித்து
கணவன் உயிர் பறித்து இல்வாழ்வை அழித்த யுத்தம்

இல்லறம் வீழ, நல்லறம் மாள, மங்கலம் களைந்த மனையாள் மனதில்
கணவனை பிரிந்த சோகம் கலையாத இருளானது
நிஜத்தை இழந்த நிழலாய் அவள், குண்டு துளைத்த உடலமாய் அவன்

புதைக்க வழியின்றி தொடரும் யுத்தம் சோகத்தை கூட்டிட-
மெய்யை மூடிய அபாயா பொய்யான கணவன் உடலை மூடிட
பொய்யாய், பழங்கதையாய் போன வாழ்வை
மெய்யாய்ச் சோகம் மூடிட-புலம்பியழும் மனைவி

அன்னை புலம்பியழுதிட, குழந்தைகள் அழுது விம்மிப் பசியால் துடித்திட
மடிந்தவனுக்காய் அபாயாவைக் களைந்தவள், குழந்தைகளின் பசிபோக்க
ஆடையையும் களைந்து மனதை மாய்த்த அகோரம்

ஐவேளை தொழுது, எவ்வேளை அழுதும் ஆறாத மனக்காயம்
குழந்தைகள் பசியாற, காமுகர் உழுதிட ரணமாகும் காயம்
ஈரவிழிகளுக்குள் இன்றும் காயாத ஈரம்
கணவன், கற்பு எல்லாம் மாயையான கோலம்

செவ்விழிகளில்-மதுரையை எரித்த கண்ணகியின் வெஞ்சினம்
ஆடை உரிந்த அம்மண நிலையில் துச்சாதனனைச் சபித்த
பாஞ்சாலியின் கொடுஞ்சினம்-யுத்தத்தில் தாய்குலத்தின் அவலம்
கண்டும் காணாத இருண்ட காமுகர் உலகம்

வாங்கொலித்த தேசத்தில், நாளும் அழுகையும், ஒப்பாரியும்
நிலா உலவிடும் வானில் குண்டு வீச்சு விமானங்களின் வான்வலம்

ஒயாது ஒலிக்கும் துப்பாக்கிகள் உறங்காது உயிர்களைத் தேடியழிக்க
காயாத குருதியும், கண்ணீரும் அல்லாவைக் கூவியழைக்க
வல்ல அல்லா கண் மறைந்த மாயம்தான் என்னே?

கலையாத சோக இருளுக்குள் காலதேவனின் மரண ஓலங்கள்
கறுத்த அபாயாவுக்குள் மறைந்த இளமையும்-அழகும்-
காமமப் பசி தீர்க்கும் அட்சய பாத்திரமான அவலங்கள்?

விடியல் இல்லாத விதவைக்கு, வாழ்வே சுமையான தொல்லை.
அமைதியின் மதத்தில் ஓயாத யுத்த வேள்வி
அபலைகளின் வாழ்வோ நாளும் ஆகுதி

நெய் வார்த்த தீயில்-அபலைகள் நித்தம் நீராட
பொய் வார்த்த குருதியில் யுத்த வெறியர் நீராட
எரியும் காமம்- எரிக்கும் யுத்தம், ஓடும் இரத்தம்

தொழுத கடவுளை இரந்தும் பலனில்லை,அபலைகளின் துயரும்
வல்ல அல்லாவுக்கு ஏனோ தெரியவில்லை?
அபாயவும் வெறும் போர்வையாக, ஷரியாவும் வரண்ட நீதியாக
வஞ்சகர் பாதையில் வல்லுறவும் யுத்த நீதியாக
மதம் அபினியும், போதை வஸ்துமானது

அஸ்லாமு அலேக்கும், அல்லாகு அ.:.க்பர்- வெறும் கோஷங்களாக
கண்ணீர் தவமியற்றும் அபலைகள்-யுத்த காரிருளில் வழிமாறும் குழந்தைகள்-
நாளை இவர்களும் ஆயுதம் ஏந்தலாம், போரைத் தொடரலாம்
கன்னியரைத், தாய், விதவைகளை வல்லுறவு செய்யலாம்.

ஐவேளை தொழுதும் காமம் அவியாத் தீயானது
பெண்மை காமுகர் வேள்வியில் ஆகுதியானது
யுத்தமோ அரக்கர்களின் அசுர வேள்வியானது

யுத்தத்தால், இழிவாய் போன மனித உயிர்கள்-
மலிவாய் போன மங்கையர் மானங்கள்
செத்துப்போன மனிதம்-பிணவாடை வீசும் மதம்
ஓ இட்லிப் என் ஊரே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-17.06.2023*

# என் பிரியமானவனுக்கு

---

இறைவன் தந்த இன்பக் கொடை-ஐயா உன் நட்பு-
பல்லாண்டு கழித்தும் இளமை மாறாத
இதயம் ஒழுகிடும் கற்பாய் நம் நட்பு.





இளவயது முதல் கல்லூரியில் தொடங்கிய நட்பு
இன்றும் இளமையோடு இனிக்க அருகருகே இருந்து-
ஆயிரம் வினாக்களுக்கு விடைதேடி களிக்க
ஓர் உயிராய் கற்ற கல்வி-திசைமாற
வெவ்வேறு பாதைகளில் விலகிய வாழ்வு
இன்றும் விலகாத நட்பு.

உள்ளம் மறவாத நட்பு என்றும் உயிரோடு தழைக்க
ஐம்பதாண்டு கடந்தும் எண்ணிப் பார்த்து- மனம் இன்புற
இறைவன் தந்த அரிய கொடையாய் ஐயா நீ எனக்கு

இனியவனே உன் நினைவும், முகமும், நட்பும்
இன்றும் என்றும் என் நெஞ்சுக்குள் தேனாய் இனிக்க-
நிலாவாய் உலவ மாறாத உன் புன்னகையும்
மாசில்லாத உன் நேசமும் நெஞ்சை நெகிழவைக்க
வாழ்க நண்பா என்றும் நலமோடும் வளமோடு
பல்லாண்டு பல்லாண்டு வாழ்க என்று
பரவசத்தோடு என வாழ்த்துகின்றேன



சைக்கிள் ஓடக் கற்றுக் கொடுத்தாய்-
தாயின் சமாதிக்கு வண்ணம் பூச,
ஆலையடிச்சோலைக்கு அழைத்துச் சென்றாய்
கடற்கரைக்கு அழைத்துச் சென்றாய்-
என்றும் என் சிந்தனைக்கு மதிப்பளித்தாய்

நட்போடு உறவாடி, சகோதரனாய் என்னையும் எற்று
பல்லாண்டு சென்றும் பரிவோடு நேசிக்கும் உன் அன்பிட்கு
நான் செய்த தவம் ஏது? உறவாய் இறை தந்த வரம் நீ
என்றும் வாழ்க வாழ்கவே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra - 17.06.2023*

# என்னை மறந்ததேன்?

---

ஏன் மறந்தாய் என்னை?, தேய்ந்து மறையும் வான் நிலவும்
மீண்டும் பிறந்தே காதல் வானைத் தேடிவர
எழுந்து விழும் அலைகளும் மீண்டும். மீண்டும்
எழுந்தே காதல் சொல்லி கரையை அணைத்து மகிழ
கடலிலும் காதலின் ஓயாத அலைகள்
வான் கடலிலும் நிலவின் காதல் நிலைகள்

மலையில் பிறந்து-மடுவில் விழுந்தும்
கடலைத் தேடும் நதியின் காதல் ஓய்ந்ததில்லை
சங்கமத்தில் காதலின் ஆனந்த நர்த்தனம்
காதலில் வீழாதவருக்குப் புரிவதில்லை

கரைந்தே காதலைச் சொல்லும் குயிலிற்கும், கனிந்தே பதில் குரல் கொடுக்கும் இணை
கரையும் குரலில் கல்லும் உருக , காதல் நெஞ்சம் உருகியே குரல் கொடுக்க
இணையில்லாக் காதல் இசையாக காற்றினிலே வரும் கீதம்

கண்ணனாய்த் தேடுகின்றேன்- காதல் ராதை எங்கே?
ஸ்ரீராமனாய் அலைகின்றேன் என் காதல் சீதை எங்கே?
காலமெல்லாம் காத்திருப்பேன் என்றவளே
வார்த்தை மறந்தாள் -காதலைத் துறந்தாள்.

என் கண்களில் ஈரம் காயவில்லை
என் நெஞ்சுக்குள் எரிமலையின் குமுறல் ஓயவில்லை
என் எழுத்தில் கவிதையாய் , என் வண்ணங்களில் ஓவியமாய்
என்னை வருத்திடும் காதல் புயலாய் நீ-ஏனடி?

வெந்த புண்ணில் விழும் அமிலத் துளிகளாய்
நொந்த மனதில் காதலே உன் பிரிவு
ஒற்றைக் குயிலாய் என் நெஞ்சத்தின் அகவு

மலரைத் தழுவி நிலவும் காதல் சொல்ல
மனதை தழுவும் உன் நினைவும் சோகம் சொல்ல
காதல் ஒரு தவம்-கன்னி மனது ஒரு வரம்
காதலின்றி சாதலும் பெரு வரம்

வண்டுபடு கூந்தல் வாசம் என்னை மயக்க
கண்பட நாணும் பூ முகம் என்னைக் கனவிலும் வருத்த,
உண்டும் திகட்டாத இதழமுது எங்கே?
இதயம் தவிக்க, காதல் மழையின்றி வாடும் இதயம்
மறவாத காதல் நெஞ்சே என்னை மறந்த துயரம்?
தேவதாஸாய் பார்வதி என் அவலம்?

கனவும். நினைவும் காதலே உன்னை காட்ட
நிலவும், மலரும் காதலே உன்னை நினைவுட்ட
அஞ்சுகமாய் கொஞ்சி, காதல் கோகிலமாய் கரைந்து
அன்னமாய் நடந்து-வண்ணமயிலாய் ஆடியவள்
நெஞ்சுக்குள் காதல் கூடு கட்டிய தூக்கணாம் குருவி



பண்ணால் துதிக்க-வண்ணத் தமிழ் பெண்ணாள்
வாசப் பூச்செண்டு கொடுக்க
கன்னி மனம் தந்த காதல் பெண்ணாள் எங்கே?

ஒரு மொழிக்காய் தவமிருந்து, ஒரு சேதிக்காய் தூது விட்டு
துயில் கொள்ளும் அலைபேசி
துயில் மறந்து-பசி துறந்து, பஞ்சணை விடுத்து-
காதல் நோன்பிருக்கும் பரதேசி, காதலே எனை நீ நேசி



விண்ணும், மண்ணும், விரி கடலும்
நதியும். குயிலும், மலரும், வண்டும் காதல் சொல்ல-
கலாபமயிலே ஏனடி காதலைச் சொல்ல மறந்தாய்?
காதலன் என்னை மறந்தாய்?

உனைக் காணாமல் கண்களும் கண்ணீர் சிந்த
மொழி கேளாமல் செவிகளும் வாடிச்சோர
என் வீணையிலும் சோகமடி
என் இதயத்திலோ எரிமலையின் குமுறலடி
என் நெஞ்சினிலோ ஒற்றைக்குயிலின் கானமடி

பாச மலராய் சூட நினைத்தவளோ
பழுங்காகிதப்பூவாய் என்னை கசக்கி எறிந்தாள்
சோடிக்குயிலாய் பாட நினைத்தவனை
ஒற்றைக்குயிலாலாய் கரைய விட்டாள்.

கன்னியருக்கு காதலும் பருவத்தில் ஆடி மகிழும் விளையாட்டுப்போலும்
கட்டித் தழுவி கொஞ்சி மகிழ்ந்தபின் காதலையும் ஒரு மூலையில் தூக்கிப்போட்டிட
காதல் விளையாட்டுக்கு -காதலே உன் கைகளில் கிடைத்த
(Teddy bear) கரடிப்பொம்மை நான்தானா?

வீசி எறிந்திட வெந்தணலில் வீழ்ந்த புழுவாய்
என் மனம் துடித்து தவித்திட உன் காதலும் பொய்தானா?
கன்னியர் மனங்களும் புதைமணல்தானா?
ஓ காதலே என் காதலே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-17.06.2023*

# ஞானத் தேடல்

---

கற்றேன், கல்விமான் எனப் போற்றப்பட்டேன்
கலையாத கர்வம் தலையில் மணிமுடியாய் அமர,
தகவல் அறிவால் தலைக்கனம் வளர, பேரும், புகழும்,
சீடர் கூட்டமும் பெருகிட, ஆணவம் என்னுள் குடிவந்ததை
அறியாத அஞ்ஞானியாய் அறிஞன் நான்.





ஒரு நாள் சுற்றிலும் நூல்கள் விரிந்து கிடக்க
படித்த களைப்பில் கண்ணுறங்க மலர்ந்த ஓர் கனவு

அழுக்குக் கந்தை, அவலட்சணத் தோற்றம் கண்களை வருத்த
வீசும் துர்நாற்றம் வயிற்றைக் குமட்டி வாந்தியை வரவழைக்க
வந்தவள் வினவினாள் ஐயா! அறிஞனே என்ன செய்கிறாய்?

கற்கின்றேன்-கல்விக் கடலைக் கரைத்துக் குடிக்கின்றேன்
என்ன கற்றாய்? எதைக் கற்கின்றாய்? எதனைக் கற்பிக்கின்றாய்,
தர்மம், தத்துவம், சாஸ்திரம், இதிகாசம், என்றேன்
சத்தியத்தை, தர்மத்தை நீ புரிந்து கொண்டாயா?
ஆம் நான் விளங்கிக் கொண்டேன்.




புரிந்தது வார்த்தையா? அதன் ஆழ்ந்த பொருளா?
சத்தியம் கற்றறியும். பாடமா?, விவாதிக்கத் தர்க்கமா?
கற்றறிந்த சத்தியத்தால் மெய்யறிவு பெற்றாயா?
யாரும் இதுவரை கேட்காத கேள்வி
என் அறிவை உரசிப் பார்க்கும் ஞான வேள்வி




வினாவே புதிராக- விடைகளால் வினவியவரை மடக்கியவனே
மயங்கித் திகைத்தேன், கேள்வி புரிய-ஆழம் தெரிய
வெட்கியே பதில் உரைத்தேன்



அவள் விழிகள் என்னைத் துளைக்க , அவள் பார்வையில்-
நிர்வாணியான கோலம் நெருப்பாய்த் தகிக்க
ஆழம் பார்க்கும் விழிகள் என் இருப்பை தகர்க்க
அறிவின் அற்ப ஆழம் என்னைப் பழிக்க
பொய் கூறத் துணிவின்றி அச்சம் ஆட்கொள்ள-பணிவாய்
வார்த்தைகளைத்தான் அறிந்தேன் பதிலுரைத்தேன்

ஆனந்தக் கூத்தாடத், தோற்றம் மாறி -தேஜஸ் மாறி
அவலட்சணமழிந்து லக்ஷமிகரம் தேன்ற
திருமகளோ? தேவதையோ? மனம் வியந்தேன்

அவளை இன்னும் மகிழ்விக்க எண்ணி
சத்தியத்தைப் புரிந்தேன்-உரைத்தேன்



புன்னகை மறைந்து-களிநடனம் கலைந்து
அழுகையும், விம்மலும் பிறக்க-அழகு மறைந்து
அவலட்சணம் ஆயிரம் மடங்காய் வளர்ந்து
மூதேவியாய், குரூபியாய் மாறிட நாறினாள்




அதிர்ந்தவன் வினவினேன் ஏன் அழுகிறாய்?
அழகியாய் தோற்றம் மாறிட மகிழ்ந்தாடினாய்-குரூபியாய்
மீண்டும் மாறிட கரைந்தழுகின்றாய் ஏனோ?

உண்மை சொன்னான் ஒரு அறிஞன் என மகிழ்ந்தேன்-
ஆனால் பின்னர் நீ உரைத்ததோ பொய்-
அறிவு வேறு, அறிதல் வேறு, உனக்கோ உண்மை புரியாது-
கற்றறிய சத்தியம் பாடமல்ல-வாழ்ந்தறியும் அனுபவமே சத்தியம்
ஆணவத்தை கழித்த தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
அதனால் அழுகின்றேன், அழகிழந்து வாடுகின்றேன்

சட்டென விழித்தேன் எல்லாம் மறைந்திட, உண்மை புரிந்திட
கற்ற குப்பைகள் என்னைச் சீண்டி நாறிட
தலையைக் கழித்து- அறிவைக் கழித்திட-ஆணவம் கரைந்திட
தூய மனத்திற்கே சத்திய தரிசனம் நிதரிசனமானது

தகவல் அறிவால் வாழும் அறிஞனின்
அவலட்சனத் தோற்றம் என்னை அச்சுறுத்தியது.
அறிவென்பதே இரவல்-அசிங்கமானது
ஞானமோ அழகானது-பரிசுத்தமானது
சுயத்தின் சொந்தமானது.-பண்டிதன் அசிங்கமானவன்
ஞானி குழந்தையைப்போல் அழகானவன்

அறிவு நாற்றமடிக்க, மெய்ஞானம் வாசம் வீச
அந்தப் பெண்ணைத் தேடினேன்-அவள் யாருமில்லை-
எங்கேயுமில்லை என்னுள்ளிருந்த ஆணவத்தின்
அவலட்சணப் பிரதிபலிப்பே அவள்
அறிவு கடந்து அறிதலால் புரிந்தேன்

நான் அறிந்ததெல்லாம் ஏதும் அறியேன் என்ற உணர்வு செழிக்க
***நாகேரம்பாவின்*** தேடல் தொடங்கியது-வாழ்வின் சத்தியத்தை அறிய
வேதங்கள் உதவாது-வாழும் குரு தேவை-
ஆன்மீகப் பயணம் தொடங்கியது.

தேடலின் முடிவில் **குரு டிலோபாவின்** அருள் கிடைக்க
சீடனைத் தேடிய குருவும் சீடனைக் கண்டு மகிழ்ந்தார்
உணர்வைப் பகிரத் தவித்த குருவும்
ஞானப் பசியோடு அலையும் சீடனும் சந்திக்க
பரிவு பிறந்தது, பகிர்தல் நடந்தது
ஞானப் பரிமாற்றம் நிகழ்ந்தது






**சீடன் தயாராகும்போது**
**குரு தோன்றுகின்றார்-நிதரிசனமானது.**

ஒரு சுடரிலிருந்து சுடர் தாவிடத் தீபம் எரிந்தது
இருள் கலைந்தது-மெய்ஞானம் பிறந்தது.
அறம், பொருள். இன்பம் கடந்து வட்டை அடைந்தார்
அறிவைக் கழித்து இதயத்தில் விழித்த ஞானப்பயணி.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18.06.2023

*According to his Tibetan Namtar, or spiritual biography, one day, while he was studying, a dakini appeared to Naropa and asked if he understood the words of the Dharma, the Buddha's teachings. He replied that he did and when she seemed happy with his response, he added that he also understood their meaning. At this point the dakini burst into tears, stating that he was a great scholar, but also a liar, as the only one who understood the teachings was her brother, Tilopa. On hearing the name "Tilopa", he experienced an intense feeling of devotion, and Naropa realised he needed to find the teacher to achieve full realisation. He abandoned his studies and position at the university and set out to find Tilopa. Naropa then underwent what is known as the twelve minor hardships in his quest to find his teacher, all the hardships being hidden teachings on his path to enlightenment. When he finally met Tilopa, he was given the four complete transmission lineages which he then began to practice. While studying and meditating with Tilopa, Naropa had to undergo a further twelve major hardships, trainings to overcome all the obstacles on his path, culminating in his full realisation of mahāmudrā. Naropa spent a total of twelve years with Tilopa. At the bank of the Bagmati river, in the precint of the Pashupatinath Temple, there is the cave where he was initiated by Tilopa and attained Siddhi*

# கை கொடுத்த தெய்வம்

---

கண் வழி நுழைந்து நெஞ்சில் காதலை விதைத்த கோதை
மணவாழ்வு மலைத்தேனாய் இனிக்க, பூவனமாய் மணக்க
இல்லறம் நல்லறமாகி காமத்துபால் சுவைக்க-நாளும்,
பொழுதும், காதலாள் என்னைச் சீராட்டும் ராதை

கைத்தலம் பற்றி வாழ்வைத் திருத்தலமாக்கிய சீதை
சூடிக் கொடுத்த ஆண்டாளாய் என் தேவி
நான், பாதி, நீ பாதியான உமாதேவி
சுகந்தமாய்க் காதலைச் சுகிக்கத் தந்த வாசுகி

கால மழையில் இளமை கரைந்து, முதுமை துளிர்க்க
கோலமயிலின் குன்றாத அழகில் பெண்மை பூத்துச்சிலிர்க்க
வளைக்கரங்களைப் பற்றி வண்ணமயிலுக்கு காதல் சொல்ல
மதிமுகத்தில் நாணச் செம்மை, நித்திலமோ நான்சூடிய பெண்மை

***ஆயுள் ரேகையாய்*** என்னோடு கலந்து
காவல் தெய்வமாய் என்னைக் காக்கும் சாவித்திரி
***இதய ரேகையாய்*** என் இதயத்தில் நிறைந்திட
தன் இதயத்தை துறந்த அன்புத் தவசியாய் ராதை

***அறிவு ரேகையாய்*** உள்ளங்கை கடந்து
ஆற்றலோடு சிந்திக்க வரம் ஈந்த கலைவாணி-
காதல் கவிதை படைக்க காமத்துப்பாலிலும்
இனிதான காமினியாய் வாசுகி

***விதி ரேகையாய்*** என்னில் வளர்ந்து
வாழ்வை சத்திய தேடலாக்கிய பாமதி
***செல்வ ரேகையாய்*** சூரிய மேட்டை தொட்டு
அன்பே செல்வம் என இயம்பிடும் அமராவதி

***காதல் ரேகையாய்*** என்னை ஆண்டு, ***கங்கண ரேகையாய்ச்*** சூழ்ந்து
இன்பமே இவள் என இயம்பிடப், பற்றிய கரத்தை பாரியின் தேராய்
பற்றிப் படர்ந்த முல்லைக் கொடி-என்னைக் காலமெல்லாம்
காதலாள் கொஞ்சி மகிழும் பஞ்சவர்ணக்கிளி.

கண் பார்த்து நெஞ்செழுதிய கவிதை
தன்னைச் சூடிக்கொடுத்த பூங்கோதை
வாழ்வில் என்னோடு நடந்த சீதை
அனுராகமான என்தன் கீதை

தாயும், தாரமுமான பெண்மை, நாளும்
எனை ஆளும் இறைமை, மடி சாயும் போது
என்னைக் கொஞ்சிடும் பெண்மை, மனம்
சாயும்போது என்னைத் தாங்கிடும் தாய்மை

விழி சாயும்போது விழித்திடும் நிலவு
விழி மலரும்போது புன்னகை பூத்திடும் ஞாயிறு
வசந்தமாய் என் வாழ்வில் கலந்த சுகந்தம்
தென்றலாய் என்னைத் தாலாட்டும் பந்தம்.

மங்களம் சொல்ல மதி நுதலில் குங்குமம்,
கார்குழலில் பூச்சரம், புன்னகையில் முத்துச்சரம்
பொங்கும் பெண்மையில் தாய்மையின் அன்புச்சரம்-

கைவளையல்களில் காம்போதி ஒலிக்க, மெட்டி ஒலியில்
பூபாளம் சிலிர்க்க, பொன் மார்பில் தாலிச்சரம் ஒளிர
பொன்மகள் பூ முகத்தில்-எந்நாளும் புன்னகை

அன்பை பகிர்தலில் அமுதசுரபி
அன்னமிடுதலில் அன்னபூரணி
இறைவனைப் போற்றும் இன்பவனம்
இவளோ இறை தந்த நறுமணம்

இரு மனம் ஒன்றாகி நறுமணமான எங்கள் திருமணம்
காதல் இதயத்திலோ வற்றாத அன்பு மனம்.
கைத்தலம் பற்றிய வாழ்வோ காதல் திருத்தலம்
இதயத்தில் இன்றும் காதல் ஊர்வலம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-18.06.2023*

# கலாப மயில்

---

பருவம் பூத்துச் செழித்த அழகில்
பூவையோ ஒரு பூவனம்
முனிகளும் மயங்கிடும் மோகனத்தில்
அரம்பைகளும் இவளிடம் அடைக்கலம்

கலை மூடிய பொன்முலைகள் கண்களைக் மயக்க
கொடி இடையும், அன்னநடையும், பூஞ்சடையும்
மைவிழிகளும் காதல் சொல்ல-காமன் கணைபட்டு
வலை பட்ட மானாய்த் துடித்த என் மனம்

கொவ்வைச் செவ்விதழ்களில் புன்னகை பூத்தாட
மூக்குத்தியில் மின்னல் கூத்தாட
மஞ்சள் குங்குமத்தில் மங்களம் இசைபாட
கொடி இடை அசைந்தாட, சிலம்பொலிக் வந்த செல்வி

என் நெஞ்சில் கானம் பாடும் காதல் குயில்,
பரதம் ஆடும் கலாபமயில்-காதலால்
என்னைக் கவர்ந்த ஒயில்
என் நெஞ்சில் பாயும் காதல் நைல்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19.06.2023

# கானகத்தில் மலராத பூ-நெருப்பு

---

கள்ளுண்ட போதையில் வண்டாட-பூத்த
கமலம் கண்டு தேனீக்கள் கொண்டாட
கங்காருவும், கோலாவும், இசைந்தாட
மலரும், கனியும் நிறைந்த பச்சைக் கானகம்

புள்ளும், விலங்கும் ஒன்றாய் வாழும் இல்லிடம்
காட்டுத் தீயில் வெந்தாட, கரும்புகையால் மூச்சுத்
திணறித் பூமி தடுமாற, தணல் பூத்த கானகம்
அனல் வீசும் வானகம்

தீயுண்டு தணலாக-மழை வேண்டும் வரமாக
தீயும் வனம் கண்டும்-உருகாத வானம்
கண்ணீராய் ஏனும் மழையைச் சிந்தாத கல்மனம்

வெண்மேகம் விதவைக் கோலம் காட்ட
தீக்குளித்து வனம் வாட-நா வரண்டு நீர் தேட
மழைக்காய் தவமிருந்து எரியும் வனம்
இறைவனை கூவியழைத்து களைக்கும் புள்ளினம்.

பூச்சூடி-கனி சூடி பூத்த வனம்-தீச் சூடி வாட,
துகில் கலையும் துச்சாதனத்-தீ , புள்ளும், விலங்கும்
கதறும் குரலில் கார்மேகக் கண்ணணைக் காணாத
பாஞ்சாலியின் சோகம் எதிரொலிக்கும்

பூவனத்தில் மலராத பூ-வண்டும், தேனியும் மொய்க்காத பூ
பூவையரும் சூடாத பூ-வாட்டும் அணையாத நெருப்பூ
கானகத்தில் பூத்த செம்மஞ்சள் பூவாய் நெருப்பு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-19.06.2023*

# கனவிதுதான் நிஜமிதுதான்

---

கண்டு மகிழ்ந்தவளை -நெஞ்சு உண்டு சுவைத்தவளை
காவியமாய் எழுதிக் களித்தவளை-ஓவியமாய்
வரைந்து மகிழ்ந்தவளை நெஞ்சில் கொண்டேன்

வண்டு மொய்க்கும் வண்ண மலராய்
வாசம் சுவைத்தே-காதல்
தேனுக்காய் சுற்றியலைந்தேன்.

சோகம் என்னைப் பற்றிக் கொள்ள
காதல் என்னைச் சுட்டுக் கொல்ல
சுடரோடு விளையாடிய விட்டிலாய்
காதல் தீயில் சுடுபட்டு வீழ்ந்தேன்.

கனவும், நினைவும், அவளாகக் காதல் கொண்டு தவித்தேன்.
இதயக்கமலத்தில் குடிவைத்த தேவதையைக் காணாமல்
துயரக் கடலில் வீழ்ந்தேன்.

காதலும் ஒரு பொழுதுக்குள்-பூவாய் வாடி உதிர
கலைந்த கனவாய் மாறித் துயரத்தில் ஆழ்த்திட
மனதிலேஒற்றைக் குயிலின் கானம்
மௌத்திலே ஓயாத முகாரியின் ஆலாபனம்

இதழ் கொண்டு-இதழ் தழுவி, இதழ் கடைந்து-இதழமுதம் பருகி
தேவனாய் இன்புற்றேன்-மலர்த்தேன் இவள் இதழ்கள்
மலைத்தேன் இவள் மொழிகள் என மலைத்தேன்

நறுந்தேன் இவளை சுவாசித்தேன், குறிஞ்சித்தேன்
இவளை நேசித்தேன், குவளைத்தேன் விழிகளை
மொய்த்தேன்-மாதை மறக்கமுடியாமல் இளைத்தேன்
இறுதியில் நஞ்சை வாஞ்சித்தேன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19.06.2023

# கனவுகள்

---

உன்னால் என் நெஞ்சில் எத்தனை வண்ணக் கனவுகள்
ஓயாத கடல் அலைபோல்-நெஞ்சை ஆரத்தழுவும்
காதல் நினைவுகள், பசி மறந்து, துயில் துறந்து
காதலில் என்னைத் தொலைத்த கவிதை நிகழ்வுகள்.

கண்பார்த்து நெஞ்செழுதிய "காதல் காவியத்தை"
காதல் சங்கத்தில் அரங்கேற்றியதும்
மண்பார்த்த நாணத்தை ஓவியமாய்த் தீட்டியதும்
விண்ணூறும் வெண்ணிலவே மண் மலர்ந்த பெண் நிலவு
என பாடியதும் இன்று கனவானதே

கண்ணூறு படாமல் காத்த காதலுக்கும்
கண்பட்டதோ? வளர் பிறையான காதலுக்கும்
அமாவாசை வந்ததோ?, காதலும் பழங்கதையானதே?

வாச மலர்களும், வண்டுபடு கூந்தலும், முத்து நகையும்,
முல்லைப் பூ வாசமும் என்னை வியக்க-இடை சிறுத்த பூங்கொடி
நடையினிலோ அசைந்தாடும் பவளக்கொடி-நெஞ்சைப்
பற்றிப் படர்ந்த முல்லைக் கொடி பட்டுப்போனதோ?

நீயில்லாத உலகோ நிலவில்லா வானாய் மாறிட-
ஒற்றைக்குயிலாய் நித்தம் கரைந்தே நான் மடிந்திட-
குறளாய் நாம் எழுதிய காதலின் உன் வரியை
ஏனடி அழித்தாய்? என் விதியை ஏனடி முடித்தாய்?

நெஞ்சமே கோயிலாக, நீயே என் காதல் தேவதையாக
அஞ்சுகமே நான் செய்த காதல் அர்ச்சனைகள் வீண்போனதோ?
தூங்கா மணி விளக்காய் எரிந்த என் இதயமும்,
காதல் நெய்யின்றிக் கருகி அணைந்ததோ?

ஆயிரம் கால் மண்டபம்போல் அழகிழந்து நொருங்கி
அறுந்த மணிமாலைபோல் என் மனம் சிதறிட
சிதைந்த என் இதயத்தின் காதல் துடிப்பு-
கண்ணே உனக்கு கேட்கின்றதா?

ஓய்ந்த என் இதயத்தை ஒரு முறை தொட்டுப்பார்
சங்கினுள் ஒலிக்கும் சந்தம்போல் என் நெஞ்சினுள் ஒலிக்கும்
உன் நாமம், என் காதலின் தேவகானம்

என்னைப்போல் உன்னை அன்பு செய்ய
உலகில் யாருமுண்டோ? அஞ்சுகமே
உன் பூ நெஞ்சைக் கேட்டுப்பார்?

உருகும் பனியாய் உள்ளம் கரைய உதிரும் கண்ணீர்
உனக்கு மஞ்சன நீராக மடிகின்றேன்-காதலே என் காதலே
எங்கிருந்தாலும் நீ வாழ்க வாழ்த்திப் போகின்றேன்

இரயில் பயணமா நம் காதல்? உன்னிடம் வந்தும்,
உன் இடம் வந்ததும், சொல்லாமல் இறங்கிவிட்டாய்,
உன் இதயத்திலிருந்து சொல்லாமல்
என்னையும் இறக்கிவிட்டாய்?

என் வாழிடம் உன் இதயம் ,
நீ வாழுமிடம்
என் இதயம் -என்பதை மறந்த தேவதை
காதலோ மாறாத சித்திரவதை

காதல் சிறகொடிந்த வண்ணப் பறவை மண்ணில் கிடக்க
இறகு விரித்த பெண் பறவை விண்ணில் பறக்க
காதலும் கானல் நீரான சாபம்
ஸ்ரீராமனாய் பொன்மானைத் தேடிய அவலம்

மனம் கொத்திப்பார்க்கும்-மங்கையரும் மரங்கொத்திபோலும்
மனம் கொறிக்கும் கன்னியரும் காதல் கிளிகள்போலும்
பணம் கொத்திப் பறவைகளுக்கு
காதலும் வெறும் பொழுதுபோக்குப் போலும்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-19.06.2023*

# கனியோ காதல் கன்னியோ

---

பூங்குழல் தோள் சாய, பூவிழிகளில் புன்னகை பூத்தாட
சிற்றிடையில் மேகலையும்,சிறு நடையில் மெட்டியும்
கட்டியம் கூற, செவ்வாய்த் தேன் சுவைக் கூற-கண்பட
நாணிச் சிவக்கும் பூமேனி, காதல் இசை மீட்கும் கலைவாணி

இமையே தடையாக-இமைக்க மறந்தேன்-
அழகை வடிப்பதா? வரைவதா?
சிற்பியாய், ஓவியனாய் சிந்தை நொந்தேன்
கவிதை படைப்பதா? கானம் இசைப்பதா ?
மனம் தடுமாற காதலில் தள்ளாட
காமத்துப்பாலில் வீழ்ந்தேன்

கருவான் நிலவாய் மலர்ந்த -காதல் பௌர்ணமி
காதல் பொய்கையில் பூத்த-காதல் பெருநிதி
இதயம் திருடும் காதலி
என்னைத் திருடிய பொன்மணி

காண்போர் மனதில் காதல் பூப் பூக்க
கண்டு வியக்க முகமோ கமலம்.
உண்டு சுவைக்க இதழ்களோ பவளம்
வண்டு சுவைக்க குழலில் குமுதம்
காதல் சுவைக்க கன்னியோ
வானவருக்கும் கிட்டாத அமுதம்

விழிகளில் மை வைத்தாள், கார் குழலிற்கு மலர் வைத்தாள்
மதிநுதலுக்கு பொட்டு வைத்தாள்-தையலாள்
செங்கமலமாய் என்னை நெஞ்சில் வைத்தே
புன்னகையால் என் காதலைப் பூஜித்தாள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19.06.2023

# யாத்திரா

---

ஆதிமனிதன் குழந்தையாய் இருப்பதை
அநாதி தேவன் விரும்பவில்லை,
அறிவுக்கனி உண்டு-ஆணவம் கொண்டு
நன்மை தீமை அறிந்திட அருள் புரிந்தார்

இருமை கடந்து ஆணவமழித்து,  விழிப்புணர்வு கொள்ளத்
துணையாய் ஏவாளை ஈந்து, தன்னை அறியும்
வாழ்வினை வாழ்ந்து அறிய-இறைவன்
புது அழைப்பினை விடுத்தே
புனித யாத்திரையைத் தொடக்கி வைத்தார்

வாழ்ந்து உன்னை நீ அறிவாய்
என்னைப் உன்னுள் நீ புரிவாய்
ஆணவத்தின் முடிவில்
இறையரசின் இனிய ஆரம்பம்

உன்னுள்ளே எல்லாம் உன்னை நீ அறிந்தால்
என் னை நீ அறிவாய் அரிய இரகசியம்.

உள்ளுணர்வின் உயர் நிலையில் இறைவன்
தாழ் நிலையில் விலங்கு
இடையிலோ ஆணவ மனிதன்

அறிந்து அறிவைக் கழித்திட-விழிப்புணர்வாய்
ஆனந்த உதயம்-உன்னை நீ அறிந்திட
சத்திய தரிசனம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-05-2023